...ந்த இந்து இளைஞர் சங்கம்
வவுனியா



மண்டப உள்த் தோற்றம்



மண்டப வெளித் தோற்றம்

தவத்திரு ஆறுமுக நாவலர் பெருமான்
அருளிய

# சைவ வினா விடை

## (தொகுப்பு)



சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம் வவுனியா

உ
சிவமயம்

தவத்திரு ஆறுமுகநாவலர் பெருமான்
அருளிய

# சைவ வினா விடை

(தொகுப்பு)



வவுனியா
சுத்தானந்த இந்து இளைஞர் சங்க
வெளியீடு

01.01.1997

உ
சிவமயம்

தவத்திரு ஆறுமுகநாவலர் பெருமான்
அருளிய

# சைவ வினா விடை

(தொகுப்பு)



வவுனியா
சுத்தானந்த இந்து இளைஞர் சங்க
வெளியீடு

**01.01.1997**

நூல் : சைவ வினா விடை
(தொகுப்பு)

எழுதியவர் : யாழ்ப்பாணம் நல்லூர் தவத்திரு
ஆறுமுக நாவலர் அவர்கள்

தொகுப்பு : அகளங்கன்

முதற்பதிப்பு : 01.01.1997

வெளியீடு : சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம்,
புகையிரத நிலைய வீதி,
வவுனியா.

அச்சுப்பதிப்பு : சுதன் அச்சகம், வவுனியா.

அட்டைப்படம் : திரு. ச. ஞானகுருபரன்

விலை : ரூபா 60.00




# பதிப்புரை

பொன்விழா ஆண்டை நெருங்கிக் கொண்டி
ருக்கும் வவுனியா சுத்தானந்த இந்து இளைஞ
சங்கத்தின் சமய, சமூகப் பணிகள் பலராலும் பாராட்
டப்படுகின்றன.

தமிழ்மக்கள் துன்பத்துக்கு மேல் துன்பம் அனு
பவித்துக் கொண்டிருக்கும் இன்றைய கால கட்டத்தில்
மக்களுக்குச் சேவை செய்யும் ஒரு நிறுவனத்தின்
தலைவராக இருந்து தொண்டாற்றத் திருவருள் கிட்டி
யுள்ளதை எண்ணிப் பெருமகிழ்வடைகின்றேன்.

சமயம் என்பது விழாக் கொண்டாடுவதற்கும்
விரதம் அனுஷ்டிப்பதற்கும் மட்டுமே உரியதொன்றல்ல.
நல்லொழுக்கத்தோடு மக்கள் வாழ்வதற்கும், மனித
நேயத்தோடு ஒழுகுவதற்கும் உரியது என்பதையும்
சைவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

"மக்கள் சேவையே மகேசன் சேவை" என்பது
எமது சமயத்தின் ஊடான சமூகச் சிந்தனை என்பதை,
எமது சங்கம் உணர்ந்து செயற்பட்டு வருகின்றது.

சமயத் தொண்டு என்பது சமூகத் தொண்டி
லிருந்து முற்றாக வேறுபடுவதொன்றல்ல. சமூகத்தின்
வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும் சமயம்
உறுதுணையாக இருக்கும் போது தான் மானுடம்
புகழ்ச்சி பெறும்.

சைவ சமயம் வாழ்க்கையோடு ஒன்றிய ஆத்மீக
வழிகாட்டல்களை மிகுதியாகக் கொண்டுள்ளது. அவ்

நூல் : சைவ வினா விடை
(தொகுப்பு)

எழுதியவர் : யாழ்ப்பாணம் நல்லூர் தவத்திரு
ஆறுமுக நாவலர் அவர்கள்

தொகுப்பு : அகளங்கன்

முதற்பதிப்பு : 01.01.1997

வெளியீடு : சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம்,
புகையிரத நிலைய வீதி,
வவுனியா.

அச்சுப்பதிப்பு : சுதன் அச்சகம், வவுனியா.

அட்டைப்படம் : திரு. ச. ஞானகுருபரன்

விலை : ரூபா 60.00



# பதிப்புரை

பொன்விழா ஆண்டை நெருங்கிக் கொண்டிருக்கும் வவுனியா சுத்தானந்த இந்து இளைஞர் சங்கத்தின் சமய, சமூகப் பணிகள் பலராலும் பாராட்டப்படுகின்றன.

தமிழ்மக்கள் துன்பத்துக்கு மேல் துன்பம் அனுபவித்துக் கொண்டிருக்கும் இன்றைய கால கட்டத்தில், மக்களுக்குச் சேவை செய்யும் ஒரு நிறுவனத்தின் தலைவராக இருந்து தொண்டாற்றத் திருவருள் கிட்டியுள்ளதை எண்ணிப் பெருமகிழ்வடைகின்றேன்.

சமயம் என்பது விழாக் கொண்டாடுவதற்கும், விரதம் அனுஷ்டிப்பதற்கும் மட்டுமே உரியதொன்றல்ல. நல்லொழுக்கத்தோடு மக்கள் வாழ்வதற்கும், மனித நேயத்தோடு ஒழுகுவதற்கும் உரியது என்பதையும் சைவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

"மக்கள் சேவையே மகேசன் சேவை" என்பது எமது சமயத்தின் ஊடான சமூகச் சிந்தனை என்பதை, எமது சங்கம் உணர்ந்து செயற்பட்டு வருகின்றது.

சமயத் தொண்டு என்பது சமூகத் தொண்டிலிருந்து முற்றாக வேறுபடுவதொன்றல்ல. சமூகத்தின் வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும் சமயம் உறுதுணையாக இருக்கும் போது தான் மானுடம் புகழ்ச்சி பெறும்.

சைவ சமயம் வாழ்க்கையோடு ஒன்றிய ஆத்மீக வழிகாட்டல்களை மிகுதியாகக் கொண்டுள்ளது. அவ்

வகையான சமய உண்மைகளை மக்களுக்கு வழங்குதல் சைவ சமய நிறுவனங்களின் தலையாய கடமையாகும்.

எமது சங்கத்தின் பல்வேறு வகையான சமூக சமயப் பணிகளுக்குள்ளே, சமய உண்மைகளை எடுத்து ரைக்கும் நூல்களை வெளியிடும் பணியும் அடங்க வேண்டும் என்ற எமது சங்கத்தின் விருப்பத்திற்கும், வேண்டுகோளுக்கும் இணங்க, எமது ஆட்சிமன்ற உறுப்பினரும் சமய நிகழ்ச்சிக் குழு உறுப்பினருமான தமிழ்மணி அகளங்கன் (திரு. நா.தர்மராஜா) இடம் அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

அந்த வகையில் சைவ சமயத்தின் உண்மைகளை விளக்கும், வினா விடையிலமைந்த நாவலர் பெருமானின் சைவ வினா விடைத் தொகுப்பு இப்போது வெளியிடப் பட்டுள்ளது.

இம்முயற்சி இன்னும் பல அரிய நூல்களை வெளி யிட ஆரம்பமாக அமைய வேண்டும் என்று விரும்பு கின்றேன்.

இந்த அரிய நூலை ஆக்கித் தந்த தமிழ்மணி அகளங்கன் அவர்களுக்கும் இதனை வெளியிடுவதிலும் உற்சாகம் காட்டி உறுதுணையாக நிற்கும் எமது சங்க ஆட்சிமன்ற உறுப்பினர்களுக்கும் என் நன்றிகள் என்றும் உரியன.

இந்நூலை அழகாக அச்சிட்டுத் தந்த வவுனியா சுதன் அச்சகத்தாருக்கும், அட்டைப் படத்தை அழகுற வரைந்து தந்த திரு. ச, ஞானகுருபரன் அவர்களுக்கும்



எம் நன்றிகள்.

சைவப் பெருமக்கள் அனைவரும் இந்நூலைப் படித்துப் பயனடையத் திருவருளை வேண்டுகின்றேன்.

இங்ஙனம்,
நா.சேனாதிராசா,
தலைவர்.
சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம்,
வவுனியா.

புகையிரத நிலைய வீதி,
வவுனியா.
01.01.1997

வகையான சமய உண்மைகளை மக்களுக்கு வழங்குதல் சைவ சமய நிறுவனங்களின் தலையாய கடமையாகும்.

எமது சங்கத்தின் பல்வேறு வகையான சமூக சமயப் பணிகளுக்குள்ளே, சமய உண்மைகளை எடுத்து ரைக்கும் நூல்களை வெளியிடும் பணியும் அடங்க வேண்டும் என்ற எமது சங்கத்தின் விருப்பத்திற்கும், வேண்டுகோளுக்கும் இணங்க, எமது ஆட்சிமன்ற உறுப்பினரும் சமய நிகழ்ச்சிக் குழு உறுப்பினருமான தமிழ்மணி அகளங்கன் (திரு. நா.தர்மராஜா) இடம் அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

அந்த வகையில் சைவ சமயத்தின் உண்மைகளை விளக்கும், வினா விடையிலமைந்த நாவலர் பெருமானின் சைவ வினா விடைத் தொகுப்பு இப்போது வெளியிடப் பட்டுள்ளது.

இம்முயற்சி இன்னும் பல அரிய நூல்களை வெளி யிட ஆரம்பமாக அமைய வேண்டும் என்று விரும்பு கின்றேன்.

இந்த அரிய நூலை ஆக்கித் தந்த தமிழ்மணி அகளங்கன் அவர்களுக்கும் இதனை வெளியிடுவதிலும் உற்சாகம் காட்டி உறுதுணையாக நிற்கும் எமது சங்க ஆட்சிமன்ற உறுப்பினர்களுக்கும் என் நன்றிகள் என்றும் உரியன.

இந்நூலை அழகாக அச்சிட்டுத் தந்த வவுனியா சுதன் அச்சகத்தாருக்கும், அட்டைப் படத்தை அழகுற வரைந்து தந்த திரு. ச, ஞானகுருபரன் அவர்களுக்கும்



எம் நன்றிகள்.

சைவப் பெருமக்கள் அனைவரும் இந்நூலைப் படித்துப் பயனடையத் திருவருளை வேண்டுகின்றேன்.

இங்ஙனம்,<br>
நா.சேனாதிராசா,<br>
தலைவர்.<br>
சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம்,<br>
வவுனியா.

புகையிரத நிலைய வீதி,<br>
வவுனியா.<br>
01.01.1997

# முன்னுரை

யாழ்ப்பாணத்து நல்லூர் தவத்திரு ஆறுமுகநாவலரவர்கள், சமய குரவர்கள் நால்வரோடு ஐந்தாம் குரவராக மதிக்கப்படும் அருளாளர் ஆவார்.

அவர், அந்நிய, மத, மொழிப் பேரிருட் கூட்டங்கள் அதிகாரக் குதிரையில் அமர்ந்து தமிழையும், சைவத்தையும் மூடி மறைத்து அழிக்க வந்த காலத்தில் அவ்விருட் கூட்டத்தை அகற்ற ஒளி வீசி எழுந்த சூரியனாக மதிக்கப்படுபவர்.

இம்மண்ணில் சைவத்தையும் தமிழையும் பாதுகாத்து வளர்த்த பெருமை நாவலர் பெருமானையே சாரும் என்றால் அது மிகையானதல்ல.

புராண படனங்கள், பிரசங்கங்கள், துண்டுப் பிரசுரங்கள், புத்தகங்கள் முதலியன மூலமாகச் சைவ சமயத்தின் பெருமைகளை எடுத்துரைத்துச் சைவர்களையும் சைவ சமயத்தையும் தலைநிமிர வைத்தவர் நாவலர் பெருமானே.

வசனநடை கைவந்த வல்லாளனாகப் போற்றப்பட்ட நாவலர் பெருமான், அறியாமை இருளில் மூழ்கிக் கிடந்த சைவர்களுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தும் நோக்கோடு பல நூல்களைச் செய்தருளினார்.

அவர் அருளிய நூல்களுக்குள்ளே சைவ வினா விடை ஒருவகையில் சிறப்பானது. இலகுவான முறையில் சைவ சமயத்தை விளங்கிக் கொள்ளக்கூடிய வகையில்,



எளிய நடையில், கேள்வி பதில் முறையில் சைவ வினா விடையை அவர் அமைத்துள்ளார்.

முதலாம் சைவ வினா விடையில் சில விடயங்களைச் சுருக்கமாகச் சொல்லி இரண்டாம் சைவ வினா விடையில் அவற்றை விளக்கியதோடு விரிவுபடுத்தியும் உள்ளார்.

வவுனியா சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம் தனது சமயப் பணிகளில் ஒரு அங்கமாகச் சமய அறிவையும் உணர்வையும் வளர்க்கக்கூடிய வகையில் சமயப் பிரசங்கங்களையும், குருபூசைகளையும், போட்டிகளையும், நவராத்திரி போன்ற விழாக்களையும் சிறப்பாக நடத்தி வருவதோடு, சமய உண்மைகளைக் கூறும் நூல்களையும் வெளியிட வேண்டும் என்ற விருப்பத் தையும் கொண்டுள்ளது.

சைவச் சிறார்கள் மத்தியில் சைவ உணர்வையும், சைவ அறிவையும் ஏற்படுத்தக் கூடிய பொருத்தமான சிறந்த நூல் ஒன்றை முதலில் வெளியிட வேண்டும் என்ற தீர்மானத்தைச் சங்கம் ஏகமனதாக நிறைவேற்றியது.

இச்சங்கத்தின் ஆட்சிமன்ற உறுப்பினர்களுள் ஒருவனாக இருக்கும் அடியேனிடம் இப்பணி ஒப்படைக்கப்பட்டமை நான் பெற்ற பாக்கியமே.

நாவலர் பெருமானின் சைவ வினா விடைகளே இதற்குப் பொருத்தமான முதல் நூல்கள் என நான் திருவருளால் எண்ணிக் கொண்டேன்.

# முன்னுரை

யாழ்ப்பாணத்து நல்லூர் தவத்திரு ஆறுமுகநாவலரவர்கள், சமய குரவர்கள் நால்வரோடு ஐந்தாம் குரவராக மதிக்கப்படும் அருளாளர் ஆவார்.

அவர், அந்நிய, மத, மொழிப் பேரிருட் கூட்டங்கள் அதிகாரக் குதிரையில் அமர்ந்து தமிழையும், சைவத்தையும் மூடி மறைத்து அழிக்க வந்த காலத்தில் அவ்விருட் கூட்டத்தை அகற்ற ஒளி வீசி எழுந்த சூரியனாக மதிக்கப்படுபவர்.

இம்மண்ணில் சைவத்தையும் தமிழையும் பாதுகாத்து வளர்த்த பெருமை நாவலர் பெருமானையே சாரும் என்றால் அது மிகையானதல்ல.

புராண படனங்கள், பிரசங்கங்கள், துண்டுப் பிரசுரங்கள், புத்தகங்கள் முதலியன மூலமாகச் சைவ சமயத்தின் பெருமைகளை எடுத்துரைத்துச் சைவர்களையும் சைவ சமயத்தையும் தலைநிமிர வைத்தவர் நாவலர் பெருமானே.

வசனநடை கைவந்த வல்லாளனாகப் போற்றப்பட்ட நாவலர் பெருமான், அறியாமை இருளில் மூழ்கிக் கிடந்த சைவர்களுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தும் நோக்கோடு பல நூல்களைச் செய்தருளினார்.

அவர் அருளிய நூல்களுக்குள்ளே சைவ வினா விடை ஒருவகையில் சிறப்பானது. இலகுவான முறையில் சைவ சமயத்தை விளங்கிக் கொள்ளக்கூடிய வகையில்,



எளிய நடையில், கேள்வி பதில் முறையில் சைவ வினா விடையை அவர் அமைத்துள்ளார்.

முதலாம் சைவ வினா விடையில் சில விடயங்களைச் சுருக்கமாகச் சொல்லி இரண்டாம் சைவ வினா விடையில் அவற்றை விளக்கியதோடு விரிவுபடுத்தியும் உள்ளார்.

வவுனியா சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம் தனது சமயப் பணிகளில் ஒரு அங்கமாகச் சமய அறிவையும் உணர்வையும் வளர்க்கக்கூடிய வகையில் சமயப் பிரசங்கங்களையும், குருபூசைகளையும், போட்டிகளையும், நவராத்திரி போன்ற விழாக்களையும் சிறப்பாக நடத்தி வருவதோடு, சமய உண்மைகளைக் கூறும் நூல்களையும் வெளியிட வேண்டும் என்ற விருப்பத் தையும் கொண்டுள்ளது.

சைவச் சிறார்கள் மத்தியில் சைவ உணர்வையும், சைவ அறிவையும் ஏற்படுத்தக் கூடிய பொருத்தமான சிறந்த நூல் ஒன்றை முதலில் வெளியிட வேண்டும் என்ற தீர்மானத்தைச் சங்கம் ஏகமனதாக நிறைவேற்றியது.

இச்சங்கத்தின் ஆட்சிமன்ற உறுப்பினர்களுள் ஒருவனாக இருக்கும் அடியேனிடம் இப்பணி ஒப்படைக்கப்பட்டமை நான் பெற்ற பாக்கியமே.

நாவலர் பெருமானின் சைவ வினா விடைகளே இதற்குப் பொருத்தமான முதல் நூல்கள் என நான் திருவருளால் எண்ணிக் கொண்டேன்.

நாவலர் பெருமானின் இருசைவ வினா விடைகளையும் ஆராய்ந்து, காலத்துக்கு ஒவ்வாதவை என என் சிற்றறிவு கூறியவற்றைத் திருவருளால் தவிர்த்தும் விரிவஞ்சிச் சிலவற்றை விடுத்தும் இச்சைவ வினா விடைத் தொகுப்பை ஆக்கியுள்ளேன்.

நாவலர் பெருமானின் ஆக்கங்களை ஆராய்ந்து சுருக்கும் அருகதையும் அறிவும் அடியேனுக்குச் சிறிதளவும் இல்லாதபோதும் காலத்தின் தேவையோடு கூடிய திருவருள் அப்படிச் செய்யத் தூண்டியுள்ளது.

இருப்பினும் அவரது கேள்வி பதில்களிலோ சொற்களிலோ கூட எந்த மாற்றத்தையும் அடியேன் செய்யவில்லை. பெரியோர்கள் எனது நோக்கத்தின் தூய்மையையும் சிறப்பையும் உணர்ந்து பொறுத்துக் கொள்வார்கள் என்று பூரணமாக நம்புகிறேன்.

இந்நூல் மிகவும் பொருத்தமானது எனக் கருதி வெளியிடும் வவுனியா சுத்தானந்த இந்து இளைஞர் சங்கத்திற்கும் இதன் தலைவர் சிவத்திரு. நா. சேனாதி ராசா (சமாதான நீதிவான்) அவர்களுக்கும் என் நன்றிகள் என்றும் உரியன.

சைவ அன்பர்கள் படித்துப் பயனடையத் திருவருளை இறைஞ்சுகின்றேன்.

நன்றி

| பம்பைமடு | | அன்புடன் |
|---|---|---|
| வவுனியா | 01.01.1997 | அகளங்கன் |



## சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம், வவுனியா.

ஆரம்பம் : ESTD : 1952, பதிவு இல : Regd. No. H.A/4/V/5
புகையிரத நிலைய வீதி, வவுனியா.

நாவலர் பெருமானின் இருசைவ வினா விடைகளையும் ஆராய்ந்து, காலத்துக்கு ஒவ்வாதவை என என் சிற்றறிவு கூறியவற்றைத் திருவருளால் தவிர்த்தும் விரிவஞ்சிச் சிலவற்றை விடுத்தும் இச்சைவ வினா விடைத் தொகுப்பை ஆக்கியுள்ளேன்.

நாவலர் பெருமானின் ஆக்கங்களை ஆராய்ந்து சுருக்கும் அருகதையும் அறிவும் அடியேனுக்குச் சிறிதளவும் இல்லாதபோதும் காலத்தின் தேவையோடு கூடிய திருவருள் அப்படிச் செய்யத் தூண்டியுள்ளது.

இருப்பினும் அவரது கேள்வி பதில்களிலோ சொற்களிலோ கூட எந்த மாற்றத்தையும் அடியேன் செய்யவில்லை. பெரியோர்கள் எனது நோக்கத்தின் தூய்மையையும் சிறப்பையும் உணர்ந்து பொறுத்துக் கொள்வார்கள் என்று பூரணமாக நம்புகிறேன்.

இந்நூல் மிகவும் பொருத்தமானது எனக் கருதி வெளியிடும் வவுனியா சுத்தானந்த இந்து இளைஞர் சங்கத்திற்கும் இதன் தலைவர் சிவத்திரு. நா. சேனாதிராசா (சமாதான நீதிவான்) அவர்களுக்கும் என் நன்றிகள் என்றும் உரியன.

சைவ அன்பர்கள் படித்துப் பயனடையத் திருவருளை இறைஞ்சுகின்றேன்.

நன்றி

| பம்பைமடு | | அன்புடன் |
|---|---|---|
| வவுனியா | 01.01.1997 | அகளங்கன் |



## சுத்தானந்த இந்து இளைஞர் சங்கம், வவுனியா.

ஆரம்பம் : ESTD : 1952, பதிவு இல : Regd. No. H.A/4/V/5
புகையிரத நிலைய வீதி, வவுனியா.

**ஆட்சி மன்றத்தினர் 1996**

| | |
|---|---|
| தலைவர் | : திரு. நா.சேனாதிராசா ச.நீ. |
| செயலாளர் | : திரு. க.தர்மதேவன் |
| பொருளாளர் | : திரு. இ.திருமேனி |
| துணைத்தலைவர்கள் | : திரு. க.நா.பத்மநாதன் |
| | திரு. க.ந.பாலச்சந்திரன் ச.நீ. |
| | திரு. ச.விஜயரத்தினம் B.A. |
| | திரு. க.அமிர்தலிங்கம் ச.நீ. |
| துணைச் செயலாளர் | : திரு. நா.யோகராசா |
| துணைப் பொருளாளர் | : திரு. இ.வீரசிங்கம் |

**ஆட்சி மன்ற உறுப்பினர்கள்**

திரு. நா.தர்மராஜா (தமிழ்மணி அகளங்கன்)
திரு. செ.தர்மரத்தினம்
திரு. ரீ.கே.இராசலிங்கம்
திரு. மா.பரமநாதர்
திரு. பா.யோகநாதன்
திரு. சீ.ஏ.இராமஸ்வாமி
திரு. க.தி.தர்மராசா
திரு. க.திருவிளங்கம்
திரு. செ.சண்முகராசா
திரு. ப.விமலநாதன்

| | |
|---|---|
| போசகர்கள் | : திரு. செ.மார்க்கண்டேயர் |
| | சிவஸ்ரீ இ.பாலச்சந்திரக் குருக்கள் |

**தர்மகர்த்தா சபையினர்**

திரு. செ.பத்மநாதன் ச.நீ.
திரு. ச.சுப்பிரமணியம்
திரு. க.இரத்தினசிங்கம் ச.நீ.
திரு. சு.மயில்வாகனம்
திரு. த.நல்லையா

## வ/சுத்தானந்த இந்து இளைஞர் சங்க கீதம்

(பல்லவி)

வவுனியா நகரினில் வளர்ந்ததோர் நிறுவனம்
வாழிய! வாழியவே!
வளம்பெறும் சுத்தானந்த இந்துஇளைஞர் சங்கம்
வாழிய! வாழியவே!
(வவுனியா)

(அனுபல்லவி)

அவனியில் புகழுடன் அருமைகள் பலவுடன்
வாழிய! வாழியவே!
ஆண்டுகள் பலப்பல அருந்தொண்டு ஆற்றியே
வாழிய! வாழியவே!
(வவுனியா)

(சரணம்)

இந்து சமயத் தொண்டும் - தமிழ்
இலக்கிய சமூகத் தொண்டும்
வந்த துயர் துடைக்கும் - பல
வகைகளில் தொண்டும் செய்து
(வவுனியா)

அறநெறிப் பாடசாலை - சிறுவர்
ஆரம்பப் பாட சாலை
அருள்நெறிப் பிரசங் கங்கள் - நல்ல
ஆத்மீக வழிகாட் டல்கள்

தங்கும் இட வசதி - பெரும்
தர்ம நிதி உதவி
எங்கும் புகழ் விளங்க - நல்ல
ஏற்ற மொடு செழித்து
(வவுனியா)

அகளங்கன்.



## பொருளடக்கம்

**சைவ வினாவிடை (தொகுப்பு)** **பக்கம்**


| | | |
|---|---|---|
| 1. | பதியியல் | 1 |
| 2. | புண்ணிய பாவ இயல் | 6 |
| 3. | விபூதியியல் | 7 |
| 4. | நித்திய கரும இயல் | 12 |
| 5. | சிவாலய தரிசன இயல் | 18 |
| 6. | தமிழ் வேத இயல் | 26 |
| 7. | பசுவியல் | 31 |
| 8. | பாசவியல் | 37 |
| 9. | வேதாகமவியல் | 39 |
| 10. | சைவ பேத வியல் | 47 |
| 11. | உருத்திராக்ஷ வியல் | 55 |
| 12. | பஞ்சாக்ஷர வியல் | 57 |
| 13. | சிவலிங்க வியல் | 64 |
| 14. | சிவாலய கைங்கரியவியல் | 74 |
| 15. | குரு சங்கம சேவையியல் | 85 |
| 16. | மாகேசுர பூசையியல் | 95 |
| 17. | விரதவியல் | 100 |
| 18. | அன்பியல் | 111 |
| 19. | ஐந்தாம் குரவர் ஆறுமுகநாவலர் | 112 |

உ

## வ/சுத்தானந்த இந்து இளைஞர் சங்க கீதம்

(பல்லவி)

வவுனியா நகரினில் வளர்ந்ததோர் நிறுவனம்
வாழிய! வாழியவே!
வளம்பெறும் சுத்தானந்த இந்துஇளைஞர் சங்கம்
வாழிய! வாழியவே!
(வவுனியா)

(அனுபல்லவி)

அவனியில் புகழுடன் அருமைகள் பலவுடன்
வாழிய! வாழியவே!
ஆண்டுகள் பலப்பல அருந்தொண்டு ஆற்றியே
வாழிய! வாழியவே!
(வவுனியா)

(சரணம்)

இந்து சமயத் தொண்டும் - தமிழ்
இலக்கிய சமூகத் தொண்டும்
வந்த துயர் துடைக்கும் - பல
வகைகளில் தொண்டும் செய்து
(வவுனியா)

அறநெறிப் பாடசாலை - சிறுவர்
ஆரம்பப் பாட சாலை
அருள்நெறிப் பிரசங் கங்கள் - நல்ல
ஆத்மீக வழிகாட் டல்கள்

தங்கும் இட வசதி - பெரும்
தர்ம நிதி உதவி
எங்கும் புகழ் விளங்க - நல்ல
ஏற்ற மொடு செழித்து
(வவுனியா)

அகளங்கன்.



# பொருளடக்கம்

| சைவ வினாவிடை (தொகுப்பு) | | பக்கம் |
|---|---|---|
| 1. | பதியியல் | 1 |
| 2. | புண்ணிய பாவ இயல் | 6 |
| 3. | விபூதியியல் | 7 |
| 4. | நித்திய கரும இயல் | 12 |
| 5. | சிவாலய தரிசன இயல் | 18 |
| 6. | தமிழ் வேத இயல் | 26 |
| 7. | பசுவியல் | 31 |
| 8. | பாசவியல் | 37 |
| 9. | வேதாகமவியல் | 39 |
| 10. | சைவ பேத வியல் | 47 |
| 11. | உருத்திராக்ஷ வியல் | 55 |
| 12. | பஞ்சாக்ஷர வியல் | 57 |
| 13. | சிவலிங்க வியல் | 64 |
| 14. | சிவாலய கைங்கரியவியல் | 74 |
| 15. | குரு சங்கம சேவையியல் | 85 |
| 16. | மாகேசுர பூசையியல் | 95 |
| 17. | விரதவியல் | 100 |
| 18. | அன்பியல் | 111 |
| 19. | ஐந்தாம் குரவர் ஆறுமுகநாவலர் | 112 |

உ

திருச்சிற்றம்பலம்

தோடுடைய செவியன் விடையேறியோர்

தூவெண்மதி சூடிக்

காடுடையசுட லைப்பொடிபூசி என்

உள்ளங்கவர் கள்வன்

ஏடுடையமல ரான்முனைநாட் பணிந்

தேத்த அருள் செய்த

பீடுடையபிர மாபுரம் மேவிய

பெம்மானிவ னன்றே.

(சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

உ

கணபதி துணை

# சைவ வினாவிடை

(தொகுப்பு)

## 1. பதியியல்

**1, உலகத்துக்குக் கருத்தா யாவர்?**
சிவபெருமான்

**2. சிவபெருமான் எப்படிப்பட்டவர்?**
நித்தியரும், சருவவியாபகரும், அநாதிமலமுத்தரும், சருவஞ்ஞரும், சருவகர்த்தாவும், நித்தியானந்தரும், சுவதந்திரருமாய் உள்ளவர்.

**3. நித்தியர் என்பது முதலிய சொற்களுக்குப் பொருள் என்ன?**
நித்தியர் - என்றும் உள்ளவர். சருவவியாபகர் - எங்கும் நிறைந்தவர். அநாதிமலமுத்தர் - இயல்பாகவே பாசங்களின் நீங்கினவர். சருவஞ்ஞர் - எல்லாம் அறிபவர். சருவகர்த்தா - எல்லாஞ் செய்பவர். சுவதந்திரர் - தம்வயமுடையவர்.

**4. சிவபெருமான் செய்யுந் தொழில்கள் எவை?**
படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்துமாம்.

**5. ஐந்தொழிலுஞ் சிவபெருமான் செய்வது தம் பொருட்டோ பிறர் பொருட்டோ?**
தம்பொருட்டன்று; ஆன்மாக்களாகிய பிறபொருட்டே.

உ

திருச்சிற்றம்பலம்

தோடுடைய செவியன் விடையேறியோர்

தூவெண்மதி சூடிக்

காடுடையசுட லைப்பொடிபூசி என்

உள்ளங்கவர் கள்வன்

ஏடுடையமல ரான்முனைநாட் பணிந்

தேத்த அருள் செய்த

பீடுடையபிர மாபுரம் மேவிய

பெம்மானிவ னன்றே.

(சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

உ

கணபதி துணை

# சைவ வினாவிடை

(தொகுப்பு)

## 1. பதியியல்

**1, உலகத்துக்குக் கருத்தா யாவர்?**
சிவபெருமான்

**2. சிவபெருமான் எப்படிப்பட்டவர்?**
நித்தியரும், சருவவியாபகரும், அநாதிமலமுத்தரும், சருவஞ்ஞரும், சருவகர்த்தாவும், நித்தியானந்தரும், சுவதந்திரருமாய் உள்ளவர்.

**3. நித்தியர் என்பது முதலிய சொற்களுக்குப் பொருள் என்ன?**
நித்தியர் – என்றும் உள்ளவர். சருவவியாபகர் – எங்கும் நிறைந்தவர். அநாதிமலமுத்தர் – இயல்பாகவே பாசங்களின் நீங்கினவர். சருவஞ்ஞர் – எல்லாம் அறிபவர். சருவகர்த்தா – எல்லாஞ் செய்பவர். சுவதந்திரர் - தம்வயமுடையவர்.

**4. சிவபெருமான் செய்யுந் தொழில்கள் எவை?**
படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்துமாம்.

**5. ஐந்தொழிலுஞ் சிவபெருமான் செய்வது தம் பொருட்டோ பிறர் பொருட்டோ?**
தம்பொருட்டன்று; ஆன்மாக்களாகிய பிறபொருட்டே.

(ஆன்மா, பசு, புற்கலன் என்பவை ஒரு பொருட்சொற்கள்.)

**6. படைத்தலாவது யாது?**
ஆன்மாக்களுக்குத் தனு கரண புவன போகங்களை முதற்காரணத்தினின்றுந் தோற்றுவித்தல்.

**7. காத்தலாவது யாது?**
தோற்றுவிக்கப்பட்ட தனு கரண புவன போகங்களை நிறுத்துதல்.

**8. அழித்தலாவது யாது?**
தனு கரண புவன போகங்களை முதற்காரணத்தில் ஒடுக்குதல்.

**9. மறைத்தலாவது யாது?**
ஆன்மாக்களை இருவினைப் பயன்களாகிய போக்கியப் பொருள்களில் அமிழ்த்துதல்.

**10. அருளலாவது யாது?**
ஆன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதல்.

**11. தனு கரண புவன போகம் என்றது என்ன?**
தனு - உடம்பு. கரணம் - மன முதலிய கருவி. புவனம் - உடம்புக்கு ஆதாரமாகிய உலகம். போகம் - அநுபவிக்கப்படும் பொருள்.

**12. ஒரு காரியத்துக்குக் காரணம் எத்தனை?**
முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம்



என மூன்றாம், குடமாகிய காரியத்துக்கு முதற்காரணம் மண், துணைக்காரணம் திரிகை, நிமித்தகாரணம் குயவன்.

**13. தனு கரண புவன போகம் எனப்படும் பிரபஞ்சமாகிய காரியத்துக்கு முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம் எவை?**
முதற்காரணம் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி என மூன்று: துணைக்காரணம் சிவசக்தி, நிமித்தகாரணம் சிவபெருமான்.

**14. சிவசக்தியாவது யாது?**
அக்கினியோடு சூடுபோலச் சிவத்தோடு பிரிவின்றி உள்ளதாகிய வல்லமை.

**15. சிவபெருமானுக்கு உரிய வடிவம் எவை?**
அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்றுமாம்.

**16. சிவபெருமான் இம்மூவகைத் திருமேனியுடைய பொழுது எவ்வெப் பெயர் பெறுவர்?**
அருவத்திருமேனியுடைய பொழுது சிவன் எனவும், அருவுருவத் திருமேனியுடைய பொழுது சதாசிவன், எனவும், உருவத் திருமேனியுடைய பொழுது மகேசுரன் எனவும் பெயர் பெறுவர்.

**17. சிவபெருமானுடைய உருவம் ஆன்மாக்களாகிய நம் போலிகளுடைய உருவம் போன்றதா?**
ஆன்மாக்களுடைய உருவம் இருவினைக்கு ஈடாகத் தோல், எலும்பு முதலிய தாதுக்களால் உண்டாகிய

(ஆன்மா, பசு, புற்கலன் என்பவை ஒரு பொருட்சொற்கள்.)

6. **படைத்தலாவது யாது?**
ஆன்மாக்களுக்குத் தனு கரண புவன போகங்களை முதற்காரணத்தினின்றுந் தோற்றுவித்தல்.

7. **காத்தலாவது யாது?**
தோற்றுவிக்கப்பட்ட தனு கரண புவன போகங்களை நிறுத்துதல்.

8. **அழித்தலாவது யாது?**
தனு கரண புவன போகங்களை முதற்காரணத்தில் ஒடுக்குதல்.

9. **மறைத்தலாவது யாது?**
ஆன்மாக்களை இருவினைப் பயன்களாகிய போக்கியப் பொருள்களில் அமிழ்த்துதல்.

10. **அருளலாவது யாது?**
ஆன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதல்.

11. **தனு கரண புவன போகம் என்றது என்ன?**
தனு - உடம்பு. கரணம் - மன முதலிய கருவி. புவனம் - உடம்புக்கு ஆதாரமாகிய உலகம். போகம் - அநுபவிக்கப்படும் பொருள்.

12. **ஒரு காரியத்துக்குக் காரணம் எத்தனை?**
முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம் என மூன்றாம், குடமாகிய காரியத்துக்கு முதற்காரணம் மண், துணைக்காரணம் திரிகை, நிமித்தகாரணம் குயவன்.



13. **தனு கரண புவன போகம் எனப்படும் பிரபஞ்சமாகிய காரியத்துக்கு முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம் எவை?**
முதற்காரணம் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி என மூன்று: துணைக்காரணம் சிவசக்தி, நிமித்தகாரணம் சிவபெருமான்.

14. **சிவசக்தியாவது யாது?**
அக்கினியோடு சூடுபோலச் சிவத்தோடு பிரிவின்றி உள்ளதாகிய வல்லமை.

15. **சிவபெருமானுக்கு உரிய வடிவம் எவை?**
அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்றுமாம்.

16. **சிவபெருமான் இம்மூவகைத் திருமேனியுடைய பொழுது எவ்வெப் பெயர் பெறுவர்?**
அருவத்திருமேனியுடைய பொழுது சிவன் எனவும், அருவுருவத் திருமேனியுடைய பொழுது சதாசிவன், எனவும், உருவத் திருமேனியுடைய பொழுது மகேசுரன் எனவும் பெயர் பெறுவர்.

17. **சிவபெருமானுடைய உருவம் ஆன்மாக்களாகிய நம் போலிகளுடைய உருவம் போன்றதா?**
ஆன்மாக்களுடைய உருவம் இருவினைக்கு ஈடாகத் தோல், எலும்பு முதலிய தாதுக்களால் உண்டாகிய

உருவம், சிவபெருமானுடைய உருவம், ஆன்மாக்கள் செய்யுந் தியானம், பூசை முதலியவைகளின் பொருட்டுச் சிவசத்தியாகிய திருவருட்குணங்களுள் இன்னது இன்னது இன்ன இன்ன அவயவம் என்று பாவிக்கப்படும் உருவம்.

**18. சிவபெருமான் ஐந்தொழிலுந் தாமே செய்வாரா?**
சுத்தமாயையிற் கிருத்தியம் ஐந்துந் தாமே செய்வர். அசுத்தமாயையிற் கிருத்தியம் ஐந்தும் அனந்தேசுரரை அதிட்டித்து நின்று செய்வார். பிரகிருதியின் கீழ் உள்ள கிருத்தியம் ஐந்தும் அவ்வனந்தேசுரர் வாயிலாக ஸ்ரீகண்டருத்திரரை அதிட்டித்து நின்று செய்வார். ஸ்ரீகண்டருத்திரர் பிரமாவை அதிட்டித்து நின்று படைத்தலும், விஷ்ணுவை அதிட்டித்து நின்று காத்தலும், காலருத்திரரை அதிட்டித்து நின்று அழித்தலுஞ் செய்வார். (அதிட்டித்தல் - நிலைக்களமாகக் கொண்டு செலுத்துதல்)

**19. ஸ்ரீகண்டருத்திரர் இன்னும் எப்படிப்பட்டவர்?**
சைவாகமங்களை அறிவிக்கும் ஆசாரியர்; பிரம விட்டுணு முதலிய தேவர்களுக்கும் இருஷிகளுக்கும் அறுபத்துமூவர் முதலாயினோர்களுக்கும் நிக்கிரக அநுக்கிரகங்களைச் செய்யுங் கருத்தா; சைவத்திற் புகுந்து சமயதீஷை பெற்றவர்கள் வழிபடும் மூர்த்தி.

**20. பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவருடைய சத்திகளுக்குப் பெயர் என்ன?**
பிரமாவினுடைய சத்தி சரஸ்வதி, விட்டுணுவினுடைய சத்தி இலக்குமி, உருத்திரனுடைய சத்தி உமை, மகேசுரனுடைய சத்தி மகேசுவரி, சதாசிவனுடைய சத்தி மனோன்மணி.



**21. ஆன்மாக்களாலே பூசித்து வழிபடப்படுஞ் சதாசிவ வடிவம் யாது?**
பீடமும் இலிங்கமுமாகிய கன்மசாதாக்கிய வடிவமாம். பீடஞ் சிவசக்தி, இலிங்கஞ் சிவம்.

**22. இலிங்கம் என்பதற்குப் பொருள் என்ன?**
படைத்தல் காத்தல் முதலியவைகளினால் உலகத்தைச் சித்திரிப்பது. (லிங்க - சித்திரித்தல்)

**23. மகேசுர வடிவம் எத்தனை?**
சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்துமாம்.

**24. சிவபெருமானுக்குச் சக்தியாவர்?**
உமாதேவியார்

**25. சிவபெருமானுடைய திருக்குமாரர்கள் யாவர்?**
விநாயகக் கடவுள், வைரவக்கடவுள், வீரபத்திரக் கடவுள், சுப்பிரமணியக் கடவுள் என்னும் நால்வர்.

**26. சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும்**

உருவம், சிவபெருமானுடைய உருவம், ஆன்மாக்கள் செய்யுந் தியானம், பூசை முதலியவைகளின் பொருட்டுச் சிவசத்தியாகிய திருவருட்குணங்களுள் இன்னது இன்னது இன்ன இன்ன அவயவம் என்று பாவிக்கப்படும் உருவம்.

**18. சிவபெருமான் ஐந்தொழிலுந் தாமே செய்வாரா?**

சுத்தமாயையிற் கிருத்தியம் ஐந்துந் தாமே செய்வர். அசுத்தமாயையிற் கிருத்தியம் ஐந்தும் அனந்தேசுரரை அதிட்டித்து நின்று செய்வார். பிரகிருதியின் கீழ் உள்ள கிருத்தியம் ஐந்தும் அவ்வனந்தேசுரர் வாயிலாக ஸ்ரீ கண்டருத்திரரை அதிட்டித்து நின்று செய்வார். ஸ்ரீ கண்டருத்திரர் பிரமாவை அதிட்டித்து நின்று படைத்தலும், விஷ்ணுவை அதிட்டித்து நின்று காத்தலும், காலருத்திரரை அதிட்டித்து நின்று அழித்தலுஞ் செய்வார். (அதிட்டித்தல் - நிலைக்களமாகக் கொண்டு செலுத்துதல்)

**19. ஸ்ரீகண்டருத்திரர் இன்னும் எப்படிப்பட்டவர்?**

சைவாகமங்களை அறிவிக்கும் ஆசாரியர்; பிரம விட்டுணு முதலிய தேவர்களுக்கும் இருஷிகளுக்கும் அறுபத்துமூவர் முதலாயினோர்களுக்கும் நிக்கிரக அநுக்கிரகங்களைச் செய்யுங் கருத்தா; சைவத்திற் புகுந்து சமயதீஷை பெற்றவர்கள் வழிபடும் மூர்த்தி.

**20. பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவருடைய சத்திகளுக்குப் பெயர் என்ன?**

பிரமாவினுடைய சத்தி சரஸ்வதி, விட்டுணுவினுடைய சத்தி இலக்குமி, உருத்திரனுடைய சத்தி உமை, மகேசுரனுடைய சத்தி மகேசுவரி, சதாசிவனுடைய சத்தி மனோன்மணி.



**21. ஆன்மாக்களாலே பூசித்து வழிபடப்படுஞ் சதாசிவ வடிவம் யாது?**

பீடமும் இலிங்கமுமாகிய கன்மசாதாக்கிய வடிவமாம். பீடஞ் சிவசக்தி, இலிங்கஞ் சிவம்.

**22. இலிங்கம் என்பதற்குப் பொருள் என்ன?**

படைத்தல் காத்தல் முதலியவைகளினால் உலகத்தைச் சித்திரிப்பது. (லிங்க - சித்திரித்தல்)

**23. மகேசுர வடிவம் எத்தனை?**

சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்துமாம்.

**24. சிவபெருமானுக்குச் சக்தியாவர்?**

உமாதேவியார்

**25. சிவபெருமானுடைய திருக்குமாரர்கள் யாவர்?**

விநாயகக் கடவுள், வைரவக்கடவுள், வீரபத்திரக் கடவுள், சுப்பிரமணியக் கடவுள் என்னும் நால்வர்.

**26. சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும்**

பொருட்டு உமாதேவியாரோடும் எழுந்தருளி இருக்கும் முக்கிய ஸ்தானம் யாது?
திருக்கைலாசமலை

27. சிவபெருமான் ஆன்மாக்களுக்கு எவ்விடங்களிலே நின்று அருள் செய்வார்?
சிவலிங்கம் முதலாகிய திருமேனிகளிடத்திலும், சைவாச்சாரியார் இடத்திலும் சிவனடியார் இடத்திலும் நின்று அருள் செய்வார்.

திருச்சிற்றம்பலம்

## 2, புண்ணிய பாவ இயல்

1. சிவபெருமான் ஆன்மாக்களுக்காக அருளிச் செய்த முதனூல்கள் எவை?
வேதம், சிவாகமம் என்னும் இரண்டுமாம்.

2. வேத சிவாகமங்களில் விதிக்கப்பட்டவை எவை?
புண்ணியங்கள்

3. புண்ணியங்கள் ஆவன யாவை?
கடவுளை வழிபடுதல், தாய், தகப்பன், உபாத்தியாயர், குரு முதலாகிய பெரியோர்களை வணங்குதல், உயிர்களுக்கு இரங்குதல், உண்மை பேசுதல், செய்ந்நன்றி அறிதல் முதலானவை.

4. புண்ணியங்களைச் செய்தவர் எதனை அநுபவிப்பர்?
மேல் உலகங்களாகிய புண்ணிய லோகங்களிலே போய், இன்பத்தை அனுபவிப்பர்.



5. வேத சிவாகமங்களிலே விலக்கப்பட்டவை எ
பாவங்கள்

6. பாவங்கள் ஆவன யாவை?
கொலை, களவு, கள்ளுக்குடித்தல், மாமிச
புசித்தல், பொய்பேசுதல், வியபிசாரம், சூதாடுத
முதலானவை.

7. பாவங்களைச் செய்தவர் எதனை அனுபவிப்பர்?
நரகங்களிலே விழுந்து துன்பத்தை அனுபவிப்பர்.

திருச்சிற்றம்பலம்

## 3. விபூதியியல்

1. சிவபெருமானை வழிபடும் சமயத்துக்குப் பெயர் யாது?
சைவசமயம்

2. சைவர்களால் அவசியகமாகச் சரீரத்திலே தரிக்கற் பாலனவாகிய சிவசின்னங்கள் யாவை?
விபூதி, உருத்திராக்ஷம் என்னும் இரண்டுமாம்.

3. விபூதியாவது யாது?
பசுவின் சாணத்தை அக்கினியினாலே தகித்தலால் உண்டாகிய திருநீறு. விபூதியின் பெயர் பசிதம் பசுமம், க்ஷாரம், இரக்ஷை.

4. எந்த நிற விபூதி தரிக்கத் தகும்?
வெண்ணிற விபூதியே தரிக்கத் தகும்; கருநிற விபூதியும், செந்நிற விபூதியும், புகைநிற விபூதியும், பொன்னிற விபூதியுந் தரிக்கலாகாது.

பொருட்டு உமாதேவியாரோடும் எழுந்தருளி இருக்கும் முக்கிய ஸ்தானம் யாது?
திருக்கைலாசமலை

27. சிவபெருமான் ஆன்மாக்களுக்கு எவ்விடங்களிலே நின்று அருள் செய்வார்?
சிவலிங்கம் முதலாகிய திருமேனிகளிடத்திலும், சைவாச்சாரியார் இடத்திலும் சிவனடியார் இடத்திலும் நின்று அருள் செய்வார்.

திருச்சிற்றம்பலம்

## 2, புண்ணிய பாவ இயல்

1. சிவபெருமான் ஆன்மாக்களுக்காக அருளிச் செய்த முதனூல்கள் எவை?
வேதம், சிவாகமம் என்னும் இரண்டுமாம்.

2. வேத சிவாகமங்களில் விதிக்கப்பட்டவை எவை?
புண்ணியங்கள்

3. புண்ணியங்கள் ஆவன யாவை?
கடவுளை வழிபடுதல், தாய், தகப்பன், உபாத்தியாயர், குரு முதலாகிய பெரியோர்களை வணங்குதல், உயிர்களுக்கு இரங்குதல், உண்மை பேசுதல், செய்ந்நன்றி அறிதல் முதலானவை.

4. புண்ணியங்களைச் செய்தவர் எதனை அநுபவிப்பர்?
மேல் உலகங்களாகிய புண்ணிய லோகங்களிலே போய், இன்பத்தை அனுபவிப்பர்.



5. வேத சிவாகமங்களிலே விலக்கப்பட்டவை எவை?
பாவங்கள்

6. பாவங்கள் ஆவன யாவை?
கொலை, களவு, கள்ளுக்குடித்தல், மாமிசம் புசித்தல், பொய்பேசுதல், வியபிசாரம், சூதாடுதல் முதலானவை.

7. பாவங்களைச் செய்தவர் எதனை அனுபவிப்பர்?
நரகங்களிலே விழுந்து துன்பத்தை அனுபவிப்பர்.

திருச்சிற்றம்பலம்

## 3. விபூதியியல்

1. சிவபெருமானை வழிபடும் சமயத்துக்குப் பெயர் யாது?
சைவசமயம்

2. சைவர்களால் அவசியகமாகச் சரீரத்திலே தரிக்கற்பாலனவாகிய சிவசின்னங்கள் யாவை?
விபூதி, உருத்திராக்ஷம் என்னும் இரண்டுமாம்.

3. விபூதியாவது யாது?
பசுவின் சாணத்தை அக்கினியினாலே தகித்தலால் உண்டாகிய திருநீறு. விபூதியின் பெயர் பசிதம் பசுமம், க்ஷாரம், இரக்ஷை.

4. எந்த நிற விபூதி தரிக்கத் தகும்?
வெண்ணிற விபூதியே தரிக்கத் தகும்; கருநிற விபூதியும், செந்நிற விபூதியும், புகைநிற விபூதியும், பொன்னிற விபூதியுந் தரிக்கலாகாது.

5. **விபூதியை எப்படி எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்?**
புதுவஸ்திரத்தினாலே வடித்தெடுத்துப் புதுப்பாண்டத்தினுள்ளே இட்டு, மல்லிகை, முல்லை, பாதிரி, சண்பகம் முதுலிய சுகந்த புஷ்பங்களை எடுத்து அதனுள்ளே போட்டுப், புதுவஸ்திரத்தினாலே அதன் வாயைக் கட்டி வைத்துக்கொள்ளல் வேண்டும்.

6. **விபூதியை எதில் எடுத்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும்?**
பட்டுப்பையிலேனும், சம்புடத்திலேனும், வில்வக் குடுக்கையிலேனும், சுரைக் குடுக்கையிலேனும் எடுத்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும். குடுக்கைகளினன்றிப் பிறவற்றில் உள்ள விபூதியைக் கவிழ்க்கலாகாது.

7. **விபூதியை எந்தத் திக்கு முகமாக இருந்து கொண்டு தரித்தல் வேண்டும்?**
வடக்கு முகமாகவேனும், கிழக்கு முகமாகவேனும் இருந்து கொண்டு தரித்தல் வேண்டும்.

8. **விபூதியை எப்படித் தரித்தல் வேண்டும்?**
நிலத்திலே சிந்தா வண்ணம் அண்ணாந்து "சிவ சிவ" என்று சொல்லி, வலக்கையின் நடுவிரல் மூன்றினாலும் தரித்தல் வேண்டும். இப்படியன்றி நடுவிரல் ஆழிவிரல்களினால் இடப்பக்கந் தொடுத்திழுத்துத் தரித்தலுமாம். வாயங்காந்து கொண்டும், தலை நடுங்கிக் கொண்டும், கவிழ்ந்து கொண்டுந் தரிக்கலாகாது. ஒரு விரலாலேனும் ஒரு கையாலேனுந் தரிக்கலாகாது.



9. **விபூதி நிலத்திலே சிந்தினால், யாது செய்தல் வேண்டும்?**
சிந்திய விபூதியை எடுத்துவிட்டு அந்தத் தலத்தைச் சுத்தி செய்தல் வேண்டும்.

10. **எவ்வெவர் முன் எவ்வெப்பொழுது விபூதி தரிக்கலாகாது?**
சண்டாளர் முன்னும், பாவிகண் முன்னும், அசுத்த நிலத்தும், வழிநடக்கும் போதும், கிடக்கும் போதுந் தரிக்கலாகாது.

11. **எவ்வெக் காலங்களிலே விபூதி ஆவசியகமாகத் தரித்துக்கொள்ளல் வேண்டும்?**
சந்தியாகால மூன்றினும், சூரியோதயத்தினும் சூரியாஸ்தமயனத்தினும், ஸ்நானஞ் செய்தவுடனும், பூசைக்கு முன்னும் பின்னும், போசனத்துக்கு முன்னும் பின்னும், நித்திரைக்கு முன்னும் பின்னும், மலசல மோசனஞ் செய்து சௌசம் பண்ணி ஆசமித்த பின்னும், தீக்ஷையில்லாதவர் தீண்டிய போதும், பூனை கொக்கு எலி முதலியன தீண்டிய போதும், விபூதி ஆவசியகமாகத் தரித்தல் வேண்டும்.

12. **விபூதி தரியாதவருடைய முகம் எதற்குச் சமமாகும்?**
சுடுகாட்டுக்குச் சமமாகும்; ஆதலினால் விபூதி தரித்துக்கொண்டே புறத்திற் புறப்படல் வேண்டும்.

13. **ஆசாரியராயினுஞ் சிவனடியாராயினும் விபூதி தந்தால், எப்படி வாங்கித் தரித்தல் வேண்டும்?**
மூன்றுதரமாயினும் ஐந்துதரமாயினும் நமஸ்கரித்து

**5. விபூதியை எப்படி எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்?**

புதுவஸ்திரத்தினாலே வடித்தெடுத்துப் புதுப்பாண்டத்தினுள்ளே இட்டு, மல்லிகை, முல்லை, பாதிரி, சண்பகம் முதுலிய சுகந்த புஷ்பங்களை எடுத்து அதனுள்ளே போட்டுப், புதுவஸ்திரத்தினாலே அதன் வாயைக் கட்டி வைத்துக்கொள்ளல் வேண்டும்.

**6. விபூதியை எதில் எடுத்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும்?**

பட்டுப்பையிலேனும், சம்புடத்திலேனும், வில்வக் குடுக்கையிலேனும், சுரைக் குடுக்கையிலேனும் எடுத்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும். குடுக்கைகளினன்றிப் பிறவற்றில் உள்ள விபூதியைக் கவிழ்க்கலாகாது.

**7. விபூதியை எந்தத் திக்கு முகமாக இருந்துகொண்டு தரித்தல் வேண்டும்?**

வடக்கு முகமாகவேனும், கிழக்கு முகமாகவேனும் இருந்து கொண்டு தரித்தல் வேண்டும்.

**8. விபூதியை எப்படித் தரித்தல் வேண்டும்?**

நிலத்திலே சிந்தா வண்ணம் அண்ணாந்து "சிவ சிவ" என்று சொல்லி, வலக்கையின் நடுவிரல் மூன்றினாலும் தரித்தல் வேண்டும். இப்படியன்றி நடுவிரல் ஆழிவிரல்களினால் இடப்பக்கந் தொடுத்திழுத்துத் தரித்தலுமாம். வாயங்காந்து கொண்டும், தலை நடுங்கிக் கொண்டும், கவிழ்ந்து கொண்டுந் தரிக்கலாகாது. ஒரு விரலாலேனும் ஒரு கையாலேனுந் தரிக்கலாகாது.



**9. விபூதி நிலத்திலே சிந்தினால், யாது செய்தல் வேண்டும்?**

சிந்திய விபூதியை எடுத்துவிட்டு அந்தத் தலத்தைச் சுத்தி செய்தல் வேண்டும்.

**10. எவ்வெவர் முன் எவ்வெப்பொழுது விபூதி தரிக்கலாகாது?**

சண்டாளர் முன்னும், பாவிகண் முன்னும், அசுத்த நிலத்தும், வழிநடக்கும் போதும், கிடக்கும் போதுந் தரிக்கலாகாது.

**11. எவ்வெக் காலங்களிலே விபூதி ஆவசியகமாகத் தரித்துக்கொள்ளல் வேண்டும்?**

சந்தியாகால மூன்றினும், சூரியோதயத்தினும் சூரியாஸ்தமயனத்தினும், ஸ்நானஞ் செய்தவுடனும், பூசைக்கு முன்னும் பின்னும், போசனத்துக்கு முன்னும் பின்னும், நித்திரைக்கு முன்னும் பின்னும், மலசல மோசனஞ் செய்து சௌசம் பண்ணி ஆசமித்த பின்னும், தீக்ஷையில்லாதவர் தீண்டிய போதும், பூனை கொக்கு எலி முதலியன தீண்டிய போதும், விபூதி ஆவசியகமாகத் தரித்தல் வேண்டும்.

**12. விபூதி தரியாதவருடைய முகம் எதற்குச் சமமாகும்?**

சுடுகாட்டுக்குச் சமமாகும்; ஆதலினால் விபூதி தரித்துக்கொண்டே புறத்திற் புறப்படல் வேண்டும்.

**13. ஆசாரியராயினுஞ் சிவனடியாராயினும் விபூதி தந்தால், எப்படி வாங்கித் தரித்தல் வேண்டும்?**

மூன்றுதரமாயினும் ஐந்துதரமாயினும் நமஸ்கரித்து

எழுந்து கும்பிட்டு, இரண்டு கைகளையும் நீட்டி வாங்கித் தரித்துக்கொண்டு முன்போல மீட்டும் நமஸ்கரித்தல் வேண்டும்.

14. **எப்படிப்பட்ட விபூதி தரிக்கலாகாது?**
ஒரு கையால் வாங்கிய விபூதியும், விலைக்குக் கொண்ட விபூதியும், சிவதீக்ஷையில்லாதார் தந்த விபூதியும் தரிக்கலாகாது.

15. **சுவாமி முன்னும் சிவாக்கினி முன்னும் குரு முன்னும் சிவனடியார் முன்னும் எப்படி நின்று விபூதி தரித்தல் வேண்டும்?**
முகத்தைத் திருப்பிநின்று தரித்தல் வேண்டும்.

16. **சுவாமிக்குச் சாத்தப்பட்ட விபூதிப் பிரசாதம் யாவராயினுங் கொண்டுவரின் யாது செய்தல் வேண்டும்?**
கொண்டுவந்தவர் தீக்ஷை முதலியவற்றினாலே தம்மின் உயர்ந்தவராயின், அவரை நமஸ்கரித்து வாங்கித் தரித்தல் வேண்டும்; அப்படிப்பட்டவ ரல்லராயின், அவ்விபூதிப் பிரசாதத்தை ஒரு பாத்திரத்தில் வைப்பித்து, அதனைப் பத்திர புஷ்பங்களால் அருச்சித்து நமஸ்கரித்து எடுத்துத் தரித்தல் வேண்டும்.

17. **விபூதிதாரணம் எத்தனை வகைப்படும்?**
உத்தூளனம், திரிபுண்டரம் என இரண்டு வகைப்படும்.

18. **திரிபுண்டரமாவது யாது?**
முக்குறித் தொகுதி



19. **திரிபுண்டரம் எப்படித் தரித்தல் வேண்டும்?**
வளையாமலும், இடையறாமலும், ஒன்றை ஒன்று தீண்டாமலும், மிக அகலாமலும், இடைவெளி ஒவ்வோரங்குல வளவினதாகத் தரித்தல் வேண்டும்.

20. **திரிபுண்டரந் தரிக்கத் தக்க தானங்கள் யாவை?**
சிரம், நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள் இரண்டு, புயங்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம் இரண்டு, முதுகு, கழுத்து என்னும் பதினாறுமாம்.

21. **திரிபுண்டரந் தரிக்குமிடத்து இன்ன இன்ன தானங்களில் இவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும் என்னும் நியமம் உண்டோ?**
ஆம்; நெற்றியில் இரண்டு கடைப்புருவ வெல்லை நீளமும், மார்பிலும் புயங்களிலும் அவ்வா றங்குல நீளமும், மற்றைத் தானங்களில் ஒவ்வோ ரங்குல நீளமும் பொருந்தத் தரித்தல் வேண்டும். இவ்வெல்லையிற் கூடினும் குறையினுங் குற்றமாம்.

22. **எல்லாரும் எப்பொழுதும் விபூதியை சலத்திற் குழைத்துத் தரிக்கலாமா?**
தீக்ஷையுடையவர் சந்தியாகால மூன்றினுஞ் சலத்திற்குழைத்துத் தரிக்கலாம்; மற்றைக் காலங்களிற் சலத்திற் குழையாமலே தரித்தல் வேண்டும். தீக்ஷையில்லாதவர் மத்தியானத்துக்குப்பின் சலத்திற் குழையாமலே தரித்தல் வேண்டும்.

23. **விபூதிதாரணம் எதற்கு அறிகுறி?**
ஞானாக்கினியினாலே தகிக்கப்பட்ட பசுமல நீக்கத்தில் விளங்குஞ் சிவத்துவப்பேற்றிற்கு அறிகுறி.

திருச்சிற்றம்பலம்

எழுந்து கும்பிட்டு, இரண்டு கைகளையும் நீட்டி வாங்கித் தரித்துக்கொண்டு முன்போல மீட்டும் நமஸ்கரித்தல் வேண்டும்.

**14. எப்படிப்பட்ட விபூதி தரிக்கலாகாது?**

ஒரு கையால் வாங்கிய விபூதியும், விலைக்குக் கொண்ட விபூதியும், சிவதீக்ஷையில்லாதார் தந்த விபூதியும் தரிக்கலாகாது.

**15. சுவாமி முன்னும் சிவாக்கினி முன்னும் குரு முன்னும் சிவனடியார் முன்னும் எப்படி நின்று விபூதி தரித்தல் வேண்டும்?**

முகத்தைத் திருப்பிநின்று தரித்தல் வேண்டும்.

**16. சுவாமிக்குச் சாத்தப்பட்ட விபூதிப் பிரசாதம் யாவராயினுங் கொண்டுவரின் யாது செய்தல் வேண்டும்?**

கொண்டுவந்தவர் தீக்ஷை முதலியவற்றினாலே தம்மின் உயர்ந்தவராயின், அவரை நமஸ்கரித்து வாங்கித் தரித்தல் வேண்டும்; அப்படிப்பட்டவ ரல்லராயின், அவ்விபூதிப் பிரசாதத்தை ஒரு பாத்திரத்தில் வைப்பித்து, அதனைப் பத்திர புஷ்பங்களால் அருச்சித்து நமஸ்கரித்து எடுத்துத் தரித்தல் வேண்டும்.

**17. விபூதிதாரணம் எத்தனை வகைப்படும்?**

உத்தூளனம், திரிபுண்டரம் என இரண்டு வகைப்படும்.

**18. திரிபுண்டரமாவது யாது?**

முக்குறித் தொகுதி



**19. திரிபுண்டரம் எப்படித் தரித்தல் வேண்டும்?**

வளையாமலும், இடையறாமலும், ஒன்றை ஒன்று தீண்டாமலும், மிக அகலாமலும், இடைவெளி ஒவ்வோரங்குல வளவினதாகத் தரித்தல் வேண்டும்.

**20. திரிபுண்டரந் தரிக்கத் தக்க தானங்கள் யாவை?**

சிரம், நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள் இரண்டு, புயங்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம் இரண்டு, முதுகு, கழுத்து என்னும் பதினாறுமாம்.

**21. திரிபுண்டரந் தரிக்குமிடத்து இன்ன இன்ன தானங்களில் இவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும் என்னும் நியமம் உண்டோ?**

ஆம்; நெற்றியில் இரண்டு கடைப்புருவ வெல்லை நீளமும், மார்பிலும் புயங்களிலும் அவ்வா றங்குல நீளமும், மற்றைத் தானங்களில் ஒவ்வோ ரங்குல நீளமும் பொருந்தத் தரித்தல் வேண்டும். இவ்வெல்லையிற் கூடினும் குறையினுங் குற்றமாம்.

**22. எல்லாரும் எப்பொழுதும் விபூதியை சலத்திற் குழைத்துத் தரிக்கலாமா?**

தீக்ஷையுடையவர் சந்தியாகால மூன்றினுஞ் சலத்திற்குழைத்துத் தரிக்கலாம்; மற்றைக் காலங்களிற் சலத்திற் குழையாமலே தரித்தல் வேண்டும். தீக்ஷையில்லாதவர் மத்தியானத்துக்குப்பின் சலத்திற் குழையாமலே தரித்தல் வேண்டும்.

**23. விபூதிதாரணம் எதற்கு அறிகுறி?**

ஞானாக்கினியினாலே தகிக்கப்பட்ட பசுமல நீக்கத்தில் விளங்குஞ் சிவத்துவப்பேற்றிற்கு அறிகுறி.

திருச்சிற்றம்பலம்

## 4. நித்தியகருமவியல்

1. **நாடோறும் நியமமாக எந்த நேரத்திலே நித்திரை விட்டெழுதல் வேண்டும்?**
சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்குமுன் நித்திரை விட்டெழுவது உத்தமம். மூன்றேமுக்கா னாழிகைக்கு முன் எழுவது மத்திமம் உதயத்தில் எழுவது அதமம்.

2. **நித்திரை விட்டெழுந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?**
சலம் வாயிற்கொண்டு இடப்புறத்திலே கொப்ப ளித்து, முகத்தையுங் கை கால்களையுங் கழுவி, ஆசமனம் பண்ணி, வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் இருந்து விபூதி தரித்துக்கொண்டு குரு உபதேசித்த பிரகாரஞ் சிவபெருமானைத் தியானித்துச் சிவமூலமந்திரத்தை இயன்றமட்டுஞ் செபித்து, அருட்பாக்களினாலே உச்சவிசையோடு தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

3. **சிவத்தியான முதலியவை செய்தபின் செய்யத் தக்கவை யாவை?**
அவசியகருமம், சௌசம், தந்ததாவனம், ஸ்நானம், சந்தியாவந்தனம்,சிவபூசை, சிவாலயதரிசனம், சிவசாத்திர பாராயணம், தேவார திருவாசக பாராயணம், மத்தியான சந்தியாவந்தனம், போசனம், சிவசாத்திர படனம், சாயங்கால சந்தியாவந்தனம், சிவாலய தரிசனம், சிவபுராண சிரவணம், சயனம் என்பவைகளாம்.



4. **ஸ்நானஞ் செய்யத்தக்க நீர்நிலைகள் யாவை?**
நதி, நதிசங்கம், ஓடை, குளம், கேணி, மடு முதலியவைகளாம். நதிசங்கமாவது இரண்டு ஆறுகள் சந்தித்த இடமாம்; யாறுங் கடலுங் கூடிய இடம் எனினும் அமையும்.

5. **குளிர்ந்த சலத்திலே ஸ்நானஞ்செய்யமாட்டாத பிணியாளர் யாது செய்தல் வேண்டும்?**
ஸ்நானஞ் செய்தவர் சுத்திசெய்யப்பட்ட தானத்திலே சுத்தி செய்யப்பட்ட பாத்திரத்தில் வைத்த வெந்நீரை அவர் ஒரு பாத்திரத்தில் விட விட, எடுத்து ஸ்நானஞ் செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரத்தினால் ஈரத்தைத் துவட்டி உலர்ந்த வஸ்திரந் தரித்துப் பதினொரு மந்திரத்தை ஒருதரஞ் செபித்துக் கொண்டு சந்தியாவந்தன முதலியன செய்யலாம்.

6. **வியாதியினாலே ஸ்நானஞ் செய்யமாட்டாதவர் யாது செய்தல் வேண்டும்?**
கழுத்தின்கீழ், அரையின்கீழ், கால் என்னும் இவைகளுள் ஒன்றை, இயன்றபடி சலத்தினாலே கழுவிக் கொண்டு, கழுவாமல் எஞ்சிய உடம்பை ஈர வஸ்திரத்தினால் ஈரம் படும்படி துடைத்து அவ்வீரத்தைத் துவட்டித் தோய்த்துலர்ந்த வஸ்திரஞ் தரித்துப் பதினொரு மந்திரத்தை ஒருதரஞ் செபித்துக்கொண்டு சந்தியாவந்தன முதலிய செய்யலாம். இந்த ஸ்நானஞ் காபில ஸ்நானம் எனப் பெயர் பெறும்.

## 4. நித்தியகருமவியல்

1. **நாடோறும் நியமமாக எந்த நேரத்திலே நித்திரை விட்டெழுதல் வேண்டும்?**

சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்குமுன் நித்திரை விட்டெழுவது உத்தமம். மூன்றேமுக்கா னாழிகைக்கு முன் எழுவது மத்திமம் உதயத்தில் எழுவது அதமம்.

2. **நித்திரை விட்டெழுந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?**

சலம் வாயிற்கொண்டு இடப்புறத்திலே கொப்ப ளித்து, முகத்தையுங் கை கால்களையுங் கழுவி, ஆசமனம் பண்ணி, வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் இருந்து விபூதி தரித்துக்கொண்டு குரு உபதேசித்த பிரகாரஞ் சிவபெருமானைத் தியானித்துச் சிவமூலமந்திரத்தை இயன்றமட்டுஞ் செபித்து, அருட்பாக்களினாலே உச்சவிசையோடு தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

3. **சிவத்தியான முதலியவை செய்தபின் செய்யத் தக்கவை யாவை?**

அவசியகருமம், சௌசம், தந்ததாவனம், ஸ்நானம், சந்தியாவந்தனம்,சிவபூசை, சிவாலயதரிசனம், சிவசாத்திர பாராயணம், தேவார திருவாசக பாராயணம், மத்தியான சந்தியாவந்தனம், போசனம், சிவசாத்திர படனம், சாயங்கால சந்தியாவந்தனம், சிவாலய தரிசனம், சிவபுராண சிரவணம், சயனம் என்பவைகளாம்.



4. **ஸ்நானஞ் செய்யத்தக்க நீர்நிலைகள் யாவை?**

நதி, நதிசங்கம், ஓடை, குளம், கேணி, மடு முதலியவைகளாம். நதிசங்கமாவது இரண்டு ஆறுகள் சந்தித்த இடமாம்; யாறுங் கடலுங் கூடிய இடம் எனினும் அமையும்.

5. **குளிர்ந்த சலத்திலே ஸ்நானஞ்செய்யமாட்டாத பிணியாளர் யாது செய்தல் வேண்டும்?**

ஸ்நானஞ் செய்தவர் சுத்திசெய்யப்பட்ட தானத்திலே சுத்தி செய்யப்பட்ட பாத்திரத்தில் வைத்த வெந்நீரை அவர் ஒரு பாத்திரத்தில் விட விட, எடுத்து ஸ்நானஞ் செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரத்தினால் ஈரத்தைத் துவட்டி உலர்ந்த வஸ்திரந் தரித்துப் பதினொரு மந்திரத்தை ஒருதரஞ் செபித்துக் கொண்டு சந்தியாவந்தன முதலியன செய்யலாம்.

6. **வியாதியினாலே ஸ்நானஞ் செய்யமாட்டாதவர் யாது செய்தல் வேண்டும்?**

கழுத்தின்கீழ், அரையின்கீழ், கால் என்னும் இவைகளுள் ஒன்றை, இயன்றபடி சலத்தினாலே கழுவிக் கொண்டு, கழுவாமல் எஞ்சிய உடம்பை ஈர வஸ்திரத்தினால் ஈரம் படும்படி துடைத்து அவ்வீரத்தைத் துவட்டித் தோய்த்துலர்ந்த வஸ்திரஞ் தரித்துப் பதினொரு மந்திரத்தை ஒருதரஞ் செபித்துக்கொண்டு சந்தியாவந்தன முதலிய செய்யலாம். இந்த ஸ்நானஞ் காபில ஸ்நானம் எனப் பெயர் பெறும்.

**7. இராத்திரி ஸ்நானஞ் செய்யலாமா?**
யாகம், சந்திரகிரகணம், சிவராத்திரி, மாசப்பிறப்பு, மகப்பேறு என்பவைகளின் மாத்திரம் இராத்திரி ஸ்நானஞ் செய்யலாம்.

**8. தீண்டலினாலே எவ்வெப்பொழுது குற்றமில்லை?**
சிவதரிசனத்திலும், திருவிழாவிலும், யாகத்திலும், விவாகத்திலும், தீர்த்தயாத்திரையிலும் வீடு அக்கினி பற்றி எரியுங் காலத்திலும், தேச கலகத்திலும் சனநெருக்கத் தீண்டலினாலே குற்றமில்லை.

**9. ஸ்நானஞ் சரீரசுத்திக்கு மாத்திரந்தான் காரணமா?**
சரீரசுத்திக்கு மாத்திரமன்றிச் சரீராரோக்கியத்துக்கும், சித்தசோபனத்துக்கும், ஒருப்பாட்டுக்கும், இந்திரிய வடக்கத்துக்கும், யோக்கியத்துவத்துக்குங் காரணமாம். விடியற்கால ஸ்நானத்தினாலே பசி உண்டாகும்; நோய் அணுகாது.

**10. போசனத்துக்கு உரிய பாத்திரங்கள் யாவை?**
வாழையிலை, மாவிலை, புன்னையிலை, தாமரை யிலை, இருப்பையிலை, பலாவிலை, சண்பகவிலை, வெட்பாலையிலை, பாதிரியிலை, பலாசிலை, சுரையிலை, கமுகமடல் என்பவைகளாம். வாழை யிலையைத் தண்டுரியாது அதனுடைய அடிவலப் பக்கத்திலே பொருந்தும்படி போடல் வேண்டும். கல்லை தைக்குமிடத்துக் கலப்பின்றி ஒரு மரத்தினிலை கொண்டே ஒரு கல்லை முழுதுந் தைத்தல்வேண்டும்.



**11. போசன பாத்திரங்களை எப்படி இடம் பண்ணிப் போடல் வேண்டும்?**
போசன பாத்திரங்களைச் சலத்தினாலே செவ்வை யாகக் கழுவி, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு முழவளவை சதுரச் சிரமாகப் புள்ளியின்றி மெழுகி, அததின் மேலே போடல் வேண்டும்.

**12. இலை போட்டபின் யாது செய்தல் வேண்டும்?**
அதிலே நெய்யினாலே புரோக்ஷித்து, லவணம், கறி, அன்னம், பருப்பு, நெய் இவைகளைப் படைத்தல் வேண்டும்.

**13. போசனம் எப்படிப் பண்ணல் வேண்டும்?**
இரண்டு கால்களையும் முடக்கி இடமுழந்தாளின் மேலே இடக்கையை ஊன்றிக்கொண்டிருந்து, விதிப்படி அன்ன முதுலியவற்றைச் சுத்தி செய்து, சிவபெருமானுக்கும் அக்கினிக்குங் குருவுக்கும் நிவேதனம் பண்ணி, அன்னத்திலே பிசையத்தக்க பாகத்தை வலக்கையினாலே வலப்பக்கத்திலே வேறாகப் பிரித்துப் பருப்பு நெய்யோடு பிசைந்து, சிந்தாமற் புசித்தல் வேண்டும். அதன்பின் சிறிது பாகத்தை முன்போலப் பிரித்துப் புளிக்கறி யோடாயினும் ரசத்தோடாயினும் பிசைந்து புசித்தல் வேண்டும். அதன்பின் மோராடு பிசைந்து புசித்தல் வேண்டும். கறிகளை இடையிடையே தொட்டுக் கொள்ளல் வேண்டும். இலையிலுங் கையிலும் பற்றறத் துடைத்துப் புசித்தபின் வெந்நீரேனுந் தண்ணீரேனும் பானம் பண்ணல் வேண்டும். உமிழத்தக்கதை, இலையின் முற்பக்கத்தை மிதத்தி அதன்கீழ் உமிழ்தல் வேண்டும்.

**7. இராத்திரி ஸ்நானஞ் செய்யலாமா?**

யாகம், சந்திரகிரகணம், சிவராத்திரி, மாசப்பிறப்பு, மகப்பேறு என்பவைகளின் மாத்திரம் இராத்திரி ஸ்நானஞ் செய்யலாம்.

**8. தீண்டலினாலே எவ்வெப்பொழுது குற்றமில்லை?**

சிவதரிசனத்திலும், திருவிழாவிலும், யாகத்திலும், விவாகத்திலும், தீர்த்தயாத்திரையிலும் வீடு அக்கினி பற்றி எரியுங் காலத்திலும், தேச கலகத்திலும் சனநெருக்கத் தீண்டலினாலே குற்றமில்லை.

**9. ஸ்நானஞ் சரீரசுத்திக்கு மாத்திரந்தான் காரணமா?**

சரீரசுத்திக்கு மாத்திரமன்றிச் சரீராரோக்கியத்துக்கும், சித்தசோபனத்துக்கும், ஒருப்பாட்டுக்கும், இந்திரிய வடக்கத்துக்கும், யோக்கியத்துவத்துக்குங் காரணமாம். விடியற்கால ஸ்நானத்தினாலே பசி உண்டாகும்; நோய் அணுகாது.

**10. போசனத்துக்கு உரிய பாத்திரங்கள் யாவை?**

வாழையிலை, மாவிலை, புன்னையிலை, தாமரை யிலை, இருப்பையிலை, பலாவிலை, சண்பகவிலை, வெட்பாலையிலை, பாதிரியிலை, பலாசிலை, சுரையிலை, கமுகமடல் என்பவைகளாம். வாழை யிலையைத் தண்டுரியாது அதனுடைய அடிவலப் பக்கத்திலே பொருந்தும்படி போடல் வேண்டும். கல்லை தைக்குமிடத்துக் கலப்பின்றி ஒரு மரத்தினிலை கொண்டே ஒரு கல்லை முழுதுந் தைத்தல்வேண்டும்.



**11. போசன பாத்திரங்களை எப்படி இடம் பண்ணிப் போடல் வேண்டும்?**

போசன பாத்திரங்களைச் சலத்தினாலே செவ்வை யாகக் கழுவி, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு முழவளவை சதுரச் சிரமாகப் புள்ளியின்றி மெழுகி, அததின் மேலே போடல் வேண்டும்.

**12. இலை போட்டபின் யாது செய்தல் வேண்டும்?**

அதிலே நெய்யினாலே புரோக்ஷித்து, லவணம், கறி, அன்னம், பருப்பு, நெய் இவைகளைப் படைத்தல் வேண்டும்.

**13. போசனம் எப்படிப் பண்ணல் வேண்டும்?**

இரண்டு கால்களையும் முடக்கி இடமுழந்தாளின் மேலே இடக்கையை ஊன்றிக்கொண்டிருந்து, விதிப்படி அன்ன முதுலியவற்றைச் சுத்தி செய்து, சிவபெருமானுக்கும் அக்கினிக்குங் குருவுக்கும் நிவேதனம் பண்ணி, அன்னத்திலே பிசையத்தக்க பாகத்தை வலக்கையினாலே வலப்பக்கத்திலே வேறாகப் பிரித்துப் பருப்பு நெய்யோடு பிசைந்து, சிந்தாமற் புசித்தல் வேண்டும். அதன்பின் சிறிது பாகத்தை முன்போலப் பிரித்துப் புளிக்கறி யோடாயினும் ரசத்தோடாயினும் பிசைந்து புசித்தல் வேண்டும். அதன்பின் மோராடு பிசைந்து புசித்தல் வேண்டும். கறிகளை இடையிடையே தொட்டுக் கொள்ளல் வேண்டும். இலையிலுங் கையிலும் பற்றறத் துடைத்துப் புசித்தபின் வெந்நீரேனுந் தண்ணீரேனும் பானம் பண்ணல் வேண்டும். உமிழத்தக்கதை, இலையின் முற்பக்கத்தை மிதத்தி அதன்கீழ் உமிழ்தல் வேண்டும்.

**14. போசனம் பண்ணும்பொழுது செய்யத்தகாத குற்றங்கள் எவை?**

உண்பதற்கிடையிலே உப்பையும் நெய்யையும் படைத்துக்கொள்ளல், போசனத்துக்கு உபயோக மாகாத வார்த்தை பேசுதல், சிரித்தல், நாய் பன்றி கோழி காகம் பருந்து கழுகு என்பவைகளையும், புலையர் ஈனர் அதீக்ஷிதர் விரதபங்கமடைந்தவர் பூப்புடையவள் என்பவர்களையும் பார்த்தல் முதலியனவாம்.

**15. புசிக்கும்போது அன்னத்திலே மயிர் ஈ எறும்பு கொசுகு முதலியன காணப்படின் யாது செய்தல் வேண்டும்?**

அவைகளைச் சிறிதன்னத்தோடு புறத்தே நீக்கி விட்டுக், கை கழுவிக்கொண்டு சலத்தினாலும் விபூதியினாலுஞ் சுத்திபண்ணிப் புசித்தல் வேண்டும்.

**16. போசனம் முடிந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?**

எழுந்து வீட்டுக்குப் புறத்தே போய்க், கை கழுவிவிட்டுச் சலம் வாயிற்கொண்டு பதினாறுதரம் இடப்புறத்திலே கொப்பளித்து வாயையுங் கைகளையுங் கால்களையுங் கழுவி, ஆசமனம் பண்ணி, விபூதி தரித்தல் வேண்டும். அன்னமல்லாத பண்டங்கள் புசிக்கின், எட்டுத்தரங் கொப்பளித்து ஆசமனம் பண்ணல் வேண்டும்.

**17. போசனஞ் செய்தபின் வாக்குச்சுத்தியின் பொருட்டு யாது செய்தல் வேண்டும்?**

இல்வாழ்வார் தாம்பூலம் ஒருதர மாத்திரம் புசிக்கலாம்; துறவிகள் கிராம்பு, ஏலம், கடுக்காய்,



சுக்கு, வான்மிளகு என்பவைகளுள் இயன்ற தொன்றைப் புசித்தல் வேண்டும்.

**18. இராத்திரியில் எத்தனை நாழிகையினுள்ளே புசித்தல் வேண்டும்?**

எட்டு நாழிகையினுள்ளே புசித்தல் உத்தமம். பதினொரு நாழிகையளவேல் மத்திமம்; பதினான்கு நாழிகையளவேல் அதமம்; அதன்மேற் புசிக்க லாகாது.

**19. போசன காலத்தில் விளக்கவியின் யாது செய்தல் வேண்டும்?**

போசனம் பண்ணாது, அவ்வன்னத்தை வலக்கை யினாலே மூடி, விளக்கேற்றி வருமளவும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மானசமாகச் செபித்துக்கொண்டி ருந்து விளக்கேற்றியபின் பானையில் அன்னத்தை இடுவித்துக்கொள்ளாது. அவ்வன்னத்தையே புசித்துக்கொண்டு எழும்பல் வேண்டும்.

**20. சூரியன் அஸ்தமிக்கும் போது யாது செய்தல் வேண்டும்?**

மலசல விமோசனம் செய்து, சௌசமும் ஆசம னமும் பண்ணி, விபூதி தரித்து, சிவபெருமானை வணங்கித் தோத்திரஞ் செய்துகொண்டு, விளக்கிலே பாடங்களைப் படித்தல் வேண்டும்.

**21. அதன்பின் யாது செய்தல் வேண்டும்?**

போசனஞ்செய்து, நூறடி உலாவி, சிறிது நேரஞ் சென்றபின் சயனித்தல் வேண்டும்.

**14. போசனம் பண்ணும்பொழுது செய்யத்தகாத குற்றங்கள் எவை?**

உண்பதற்கிடையிலே உப்பையும் நெய்யையும் படைத்துக்கொள்ளல், போசனத்துக்கு உபயோக மாகாத வார்த்தை பேசுதல், சிரித்தல், நாய் பன்றி கோழி காகம் பருந்து கழுகு என்பவைகளையும், புலையர் ஈனர் அதீக்ஷிதர் விரதபங்கமடைந்தவர் பூப்புடையவள் என்பவர்களையும் பார்த்தல் முதலியனவாம்.

**15. புசிக்கும்போது அன்னத்திலே மயிர் ஈ எறும்பு கொசுகு முதலியன காணப்படின் யாது செய்தல் வேண்டும்?**

அவைகளைச் சிறிதன்னத்தோடு புறத்தே நீக்கி விட்டுக், கை கழுவிக்கொண்டு சலத்தினாலும் விபூதியினாலுஞ் சுத்திபண்ணிப் புசித்தல் வேண்டும்.

**16. போசனம் முடிந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?**

எழுந்து வீட்டுக்குப் புறத்தே போய்க், கை கழுவிவிட்டுச் சலம் வாயிற்கொண்டு பதினாறுதரம் இடப்புறத்திலே கொப்பளித்து வாயையுங் கைகளையுங் கால்களையுங் கழுவி, ஆசமனம் பண்ணி, விபூதி தரித்தல் வேண்டும். அன்னமல்லாத பண்டங்கள் புசிக்கின், எட்டுத்தரங் கொப்பளித்து ஆசமனம் பண்ணல் வேண்டும்.

**17. போசனஞ் செய்தபின் வாக்குச்சுத்தியின் பொருட்டு யாது செய்தல் வேண்டும்?**

இல்வாழ்வார் தாம்பூலம் ஒருதர மாத்திரம் புசிக்கலாம்; துறவிகள் கிராம்பு, ஏலம், கடுக்காய், சுக்கு, வான்மிளகு என்பவைகளுள் இயன்ற தொன்றைப் புசித்தல் வேண்டும்.



**18. இராத்திரியில் எத்தனை நாழிகையினுள்ளே புசித்தல் வேண்டும்?**

எட்டு நாழிகையினுள்ளே புசித்தல் உத்தமம். பதினொரு நாழிகையளவேல் மத்திமம்; பதினான்கு நாழிகையளவேல் அதமம்; அதன்மேற் புசிக்க லாகாது.

**19. போசன காலத்தில் விளக்கவியின் யாது செய்தல் வேண்டும்?**

போசனம் பண்ணாது, அவ்வன்னத்தை வலக்கை யினாலே மூடி, விளக்கேற்றி வருமளவும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மானசமாகச் செபித்துக்கொண்டி ருந்து விளக்கேற்றியபின் பானையில் அன்னத்தை இடுவித்துக்கொள்ளாது. அவ்வன்னத்தையே புசித்துக்கொண்டு எழும்பல் வேண்டும்.

**20. சூரியன் அஸ்தமிக்கும் போது யாது செய்தல் வேண்டும்?**

மலசல விமோசனம் செய்து, சௌசமும் ஆசம னமும் பண்ணி, விபூதி தரித்து, சிவபெருமானை வணங்கித் தோத்திரஞ் செய்துகொண்டு, விளக்கிலே பாடங்களைப் படித்தல் வேண்டும்.

**21. அதன்பின் யாது செய்தல் வேண்டும்?**

போசனஞ்செய்து, நூறடி உலாவி, சிறிது நேரஞ் சென்றபின் சயனித்தல் வேண்டும்.

22. **எப்படிச் சயனித்தல் வேண்டும்?**
கிழக்கேயாயினும் மேற்கேயாயினும் தெற்கேயாயினும் தலை வைத்து சிவபெருமானைச் சிந்தித்துக் கொண்டு வலக்கை மேலாகச் சயனித்தல் வேண்டும். வடக்கே தலைவைக்கலாகாது. வைகறையிலே நித்திரை விட்டெழுந்து விடல் வேண்டும். சந்தியா காலத்தில் நித்திரை செய்தவன் அசுத்தன்; அவன் ஒரு கருமத்துக்கும் யோக்கியனாகான்; அவன் தான் செய்த புண்ணியத்தை இழப்பான்; அவன் வீடு சுடுகாட்டுக்குச் சமம்.

23. **இரவிலே காலம்பெறச் சயனித்து வைகறையில் விழித்தெழுந்து விடுதலினாற் பயன் என்ன?**
சூரியன் உதிக்க ஐந்து நாழிகை உண்டென்னுங் காலம் பிராமீமுகூர்த்தம் எனப் பெயர் பெறும், சிவத்தியானத்துக்கு மனந் தெளிவது அக்காலத் தேயாம் அன்றியும் அக்காலத்தில் விழிக்கின் நோய்கள் அணுகாவாம், இராநித்திரைப் பங்கமும், வைகறை நித்திரையும், பகல் நித்திரையும் பற்பல வியாதிகளுக்குக் காரணம்.

திருச்சிற்றம்பலம்

## 5. சிவாலய தரிசன இயல்

1. **சிவபெருமானை வழிபடுவதற்கு உரிய முக்கிய ஸ்தானம் யாது?**
திருக்கோயில்

2. **பெண்கள் என்ன நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?**
பஞ்சாங்க நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.



3. **பஞ்சாங்க நமஸ்காரமாவது யாது?**
தலை, கை இரண்டு, முழந்தாள் இரண்டு என்னும் ஐந்து அவயவங்களும் நிலத்திலே பொருந்தும் படி வணங்குதல்.

4. **நமஸ்காரம் எத்தனை தரம் பண்ணல்வேண்டும்?**
மூன்று தரமாயினும், ஐந்து தரமாயினும், ஏழு தரமாயினும், ஒன்பது தரமாயினும் பண்ணல் வேண்டும். ஒரு தரம் இரு தரம் பண்ணுதல் குற்றம்.

5. **நமஸ்காரம் பண்ணியபின் யாது செய்தல் வேண்டும்?**
பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

6. **எப்படிப் பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்?**
இரண்டு கைகளையும் சிரசிலேனும் மார்பிலேனுங் குவித்து சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டு கால்களை மெல்ல வைத்துக்கொண்டு பிரதக்ஷிணம் பண்ணல்வேண்டும்.

7. **பிரதக்ஷிணம் எத்தனை தரம் பண்ணல் வேண்டும்?**
மூன்றுதரமாயினும், ஐந்து தரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பது தரமாயினும் பண்ணல் வேண்டும்.

8. **சந்நிதானங்களிலே தரிசனம் பண்ணும் போதெல்லாம் யாது செய்தல் வேண்டும்?**
இரண்டு கைகளையும் சிரசில் ஆயினும் மார்பிலாயினும் குவித்துக்கொண்டு மனங்கசிந்துருகத் தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

